[30th January 1961

**SRI V. K. KOTHANDARAMAN :** ஜில்லா ரீதியில் கொடுக்கப் பட்டபோது, உண்மையிலேயே யார் யார் தொழிலைக் கற்றுக் கொண்டு இருக்கிறார்கள், திறமை உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொடுக்கப்பட்டது. ஆனால், இப்பொழுது தாலூக்கா ரீதியில் கொடுக்கவேண்டும் என்று சொல்லும்போது, அந்த முறையை மாற்றுவதற்குக் காரணம் என்ன என்பதைத் தான் அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI P. KAKKAN :** மாறுதல் ஒன்றும் இல்லை; அதே முறையைத்தான் கையாளுகிறோம்.

**SRI M. KALYANASUNDARAM :** இம்மாதிரி கருவிகள் வினி யோகிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட்டியில் யார் யார் இருக்கவேண்டுமென்று சர்க்கார் உத்தரவு போட்டிருக் கிறார்களா? அப்படியானால், அந்த உத்தரவைப் படிப்பார்களா?

**THE HON. SRI P. KAKKAN :** அதுதான் சொன்னேன். ஒவ் வொரு ஜில்லா கமிட்டியிலும் ஏழு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அந்த ஜில்லாவிலுள்ள, எம்.எல்.ஏ., எம்.எல்.ஸி., எம்.பி., இவர் களைக் கோ-ஆப்டெட் மெம்பர்களாக சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லியிருக்கிறது என்று தெரிவிக்கிறேன்.

*Film Finance Corporation*

* 273 Q.—SRI N. K. PALANISAMI :
SRI N. R. THIAGARAJAN : } Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to set up a branch of the Film Finance Corporation to help the small producers in Madras by advancing loans at a reason able rate of interest?

**THE HON. SRI R. VENKATARAMAN :** Government have no information on the question.

**SRI N. K. PALANISAMI :** ஸார், சர்க்கார் இந்தச் சினிமாத் தொழிலை அபிவிருத்திச் செய்ய, அதன் தரத்தை உயர்த்து வதற்காக, சிறு பட உற்பத்தியாளர்களுக்கு படத்தின் தரத்தின் பேரில் கடன் கொடுக்க ஏதாவது உத்தேசம் உண்டா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** இந்த பிலிம் பைனன்ஸ் கார்பொரேஷன் என்பது மத்திய சர்க்கார் ஏற்படுத்தியிருக்கக் கூடிய ஒரு கம்பெனி அது கம்பெனிஸ் ஆக்ட்டின்கீழ் ரிஜிஸ்டர் செய்யப்படுகிறது. அவர்கள் எந்த விதமான உதவி செய்வார்கள் என்றால், படத்தின் செலவில் 75 சதவிகிதம் கடன் உதவியாகக் கொடுப்பதற்கு இந்த கம்பெனி ஏற்பாடு செய்யும். ஆனால், இன்னும் இந்தக் கம்பெனி ஆரம்பிக்கப்படவில்லை; விதிகள் தயாராகி வருகின்றன. கம்பெனி ஆரம்பித்த பிறகு என்ன உதவிகள் செய்வார்கள் என்று பார்க்கலாம்.